# மின்தமிழ் மேடை



“தமிழர்களின் விளையாட்டு”

தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)

வெளியிடும் காலாண்டு மின்னிதழ்

மின்தமிழ்மேடை - காட்சி: 2

ஜூலை - 2015



**மின்தமிழ்மேடை**
*காட்சி: 2*

---

*ஜூலை - 2015*

---

# “தமிழர்களின் விளையாட்டு”



**சொட்டாங்கல் விளையாட்டு**
*(படம்: முனைவர் செங்கை பொதுவன்)*




THF
தமிழ் மரபு அறக்கட்டளை

தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு
http://www.tamilheritage.org/

இதழ் தொகுப்பு:
**தேமொழி**

# தலையங்கம்: தமிழர்களின் விளையாட்டு

*மனித வாழ்க்கை அடிப்படையில் இயற்கையோடு பின்னிப் பிணைந்து இருப்பது. இதனை வெளிப்படுத்தும் வகையிலேயே உலகில் உள்ள எந்தவொரு இனமாக இருந்தாலும் ஒவ்வொன்றும் தனக்கென்று அடிப்படையான பண்பாட்டு விழுமியங்களைக் கொண்டிருக்கின்றன. இவ்வகை பண்பாட்டுக் கூறுகள் அந்த இனமக்களின் வாழ்க்கையில் பிரிக்கமுடியாத வகையில் அங்கம் வகிப்பனவாக பன்முகத்தன்மையோடு வெளிப்படும் வகையில் சடங்குகளாகவும், சம்பிரதாயங்களாகவும் ஆடை அணிகலன்களின் வழி வெளிப்படும் விதமாகவும், உணவு, கலை என்றும் பொழுது போக்கு அம்சங்களாகவும் வெளிப்படுத்தும் தன்மையைக் கொண்டிருக்கின்றன. அதில் விளையாட்டுக்களும் அடங்கும்.*

*பண்டைய நாகரிகங்களில் முக்கிய அம்சங்களாக விளங்கும் வழிபாட்டுச் சடங்கு விசயங்களைப் போலவே, விளையாட்டுக்களும் சமூக அங்கீகாரம் பெற்ற ஒரு விசயமாகவே இருந்து வருவதை அத்தகைய நாகரிகங்களைப் பற்றி வாசிக்கும் போது அறிகின்றோம், உதாரணமாக கிரேக்க, ஜப்பானிய, எகிப்திய நாகரிகங்களைக் குறிப்பிடலாம். தமிழ் இலக்கியங்களை வாசித்தறியும் போது தமிழர் தம் பண்டைய வாழ்க்கை முறையில் விளையாட்டுக்கள் பெருமை கொள்ளத்தக்க வகையில் அங்கம் வகித்திருக்கின்றன என்ற செய்தியை அறிகின்றோம்.*



*வீரத்தை வெளிப்படுத்தும் விளையாட்டு, அழகியல் கூட்டும் விளையாட்டு, முதியோருக்கென்று விளையாட்டு, இளம் குழந்தையர் விளையாட்டு, பெண்களுக்கென்று தனி விளையாட்டு என்று விளையாட்டுக்கள் பன்முகப் பரிமாணங்களில் அமைந்திருந்தன. இந்த விளையாட்டுக்கள் உடலுக்கு புத்துணர்ச்சியையும் உள்ளத்திற்கு மலர்ச்சியையும் அளிப்பனவாக அமைந்திருந்தன. இந்த அவசர யுகத்தில், மாறி வரும் கால ஓட்டத்தில் இந்த விளையாட்டுக்களில் ஏறக்குறை பெரும் எண்ணிக்கையிலானவை தமிழ் மக்களின் அன்றாட வாழ்க்கையிலிருந்து படிப்படியாக மறைந்து வரும் நிலை ஏற்பட்டுள்ளதை நாம் மறுக்க முடியாது.*

*திருச்சியிலிருந்து ஏறக்குறைய 45 கிமீ தூரத்தில் இருக்கும் ஒரு சிற்றூர் மலையடிப்பட்டி. இது புதுக்கோடையைச் சார்ந்த கிராமம். இங்கு எழில் நிறைந்த இயற்கைச் சூழலில் ஒரு மாபெரும் பாறையில் இரண்டு கோயில்கள் ஒன்றாக என இணைந்து ஒரு குடைவரைக் கோயில் அமைந்திருக்கின்றது. ஒன்று சிவபெருமானுக்காகவும் மற்றொன்று அனந்தபத்மநாப ஸ்வாமிக்காகவும் என அமைக்கப்பட்ட கோயில்கள் இவை. இக்கோயில் 8ம் நூற்றாண்டைச் சேர்ந்த தந்தி வர்மன் எனும் பல்லவ மன்னனால் உருவாக்கப்பட்டிருக்கலாம் என அறிய முடிகின்றது. இக்கோயில் தமிழகத்தின் வரலாற்றுச் சிறப்பினை உணர்த்தும் கலைக்கோயில்கள் பட்டியலில் ஒன்றாக இடம்பெறுகின்றது. எண் 134, 135 [http://asi.nic.in/asi_monu_alphalist_tamilnadu.asp](http://asi.nic.in/asi_monu_alphalist_tamilnadu.asp).*

*இந்தக் குடைவரை கோயிலின் அருகில் இருக்கும் பிரமாண்ட வடிவ பாறைகளின் மேல் சமணப் படுகைகள் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அப்பகுதியில் பாறைகளில் கீறப்பட்ட ஆடுபுலியாட்டம் விளையாட்டினை ஒத்த ஓவியம் ஒன்று காணப்படுகிறது, இதன் காலம் பிற்காலத்தைச் சேர்ந்ததாகவும் இருக்கலாம். [http://www.tamilheritage.org/thfcms/index.php/2008-12-05-21-27-39/2014-03-28-17-31-54](http://www.tamilheritage.org/thfcms/index.php/2008-12-05-21-27-39/2014-03-28-17-31-54)*



நாகரிக உலகின் துரித செயல்பாடுகளில் மக்கள் சிந்தனை கிராமப்புரப் பழக்க வழக்கங்களை ஒதுக்கி விட்டு பொது நீரோடையில் பயணிக்க விரும்பும் போக்கையே வெளிப்படுத்துவதைக் காண்கின்றோம். இது தமிழர் பண்பாட்டு அம்சங்களைப் பாதுகாக்க உதவாது. மாறாக படிப்படியாக இவை மக்கள் மனதிலிருந்தும் புழக்கத்திலிருந்தும் மறைந்து செல்லும் நிலையே ஏற்படும். இந்த நிலை வளம் நிறைந்த, கலை அழகும் நேர்த்தியும் நிறைந்த தமிழர் பண்டைய விளையாட்டுக்களுக்கு ஏற்படக் கூடாது.

இதனை மனதில் கொண்டு நமது பாரம்பரிய வளங்களில் முக்கியமானதான விளையாட்டுக்களை மக்கள் மத்தியில் மீண்டும் பரவலாக்கி அவற்றை நாம் புழக்கத்தில் கொண்டு வரும் வகையிலான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். மக்களின் எல்லாத் தரப்பினருக்கும் பாரம்பரிய விளையாட்டுக்கள் பற்றிய அடிப்படை தகவல்களை இன்றைய செய்தி தகவல் ஊடகங்களின் வழி சரியான வகையில் அறிமுகப்படுத்துவதும் இப்பணியில் அடங்கும். பள்ளிகள் கல்லூரிகள் ஆகியனவும் இம்முயற்சியில் தமது பங்கினை ஆற்றுதல் இளம் தலைமுறையினர் இளம் வயது முதலே இந்த விளையாட்டுக்களைப் பழகிக் கொள்ள வாய்ப்பளிப்பதாக அமையும்.

அன்புடன்
சுபாஷிணி

---



சுபாஷிணி
ksubashini@gmail.com

---

# இந்த இதழில்.....

*(மின்தமிழ்மேடை வலைத்தளத்தில் ஏப்ரல் 16, 2015 முதல் ஜூலை 15, 2015 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

# வைகை நதி நாகரிகம் ! மதுரை மண்ணுக்குள்... ரகசியங்களின் ஆதிநிலம்!

- சு. வெங்கடேசன்

படங்கள்: ஸ்ரீராம் ஜனக், கே.ராஜசேகரன்
ஆனந்த விகடன் கட்டுரை - ஜூலை 29, 2015
http://www.vikatan.com/article.php?module=magazine&aid=108524

ஒரு காட்சியை, கற்பனை செய்து பாருங்கள்... ஒரு வீட்டுக்குள் உட்கார்ந்து இரண்டு பெண்கள் தாயம் விளையாடுகிறார்கள். அவர்களில் ஒரு பெண், கழுத்தில் முத்துமணி மாலை அணிந்திருக்கிறாள். தூய வெண்ணிற முத்துக்களின் ஒளி, வீடு முழுவதும் சிதறியபடி இருக்கிறது. அது போதாது என, காதுகளில் பளிங்கால் ஆன பாம்படம் அணிந்திருக்கிறாள், அது முத்துமணி மாலையின் ஒளியையும் விஞ்சுகிறது. அவளோடு எதிரில் உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருப்பவளோ, தனது கழுத்தில் ஆப்கானிஸ்தானில் கிடைக்கும் மூலப்பொருளைக் கொண்டு செய்யப்படும் சூது பவளத்தால் ஆன (Carnelian) மணிமாலை அணிந்திருக்கிறாள். அதன் அழகு எல்லையற்றதாக இருக்கிறது. இருவரும் விளை யாடிக்கொண்டிருக்கும்போது தாகம் எடுக்கிறது. உள்ளே இருக்கும் சிறுமியிடம் நீர் கொண்டுவரச் சொல்கிறார்கள்.

வீட்டுக்குள் இருக்கும் சிறுமி, ஓடோடி வந்து ரோமானியக் குவளையில் தண்ணீர் கொடுக்கிறாள். கொடுப்பவளின் கையில் சித்திரம் வரையப்பட்ட சங்கு வளையல் சரசரக்கிறது. அவர்கள் தண்ணீரை வாங்கிக் குடித்துவிட்டு மீண்டும் தாயக்கட்டைகளை உருட்டுகிறார்கள். அவர்களின் உள்ளங்கையில் இருந்து உருளும் தாயக்கட்டைகள் தந்தத்தால் செய்யப்பட்டிருக்கின்றன.


தந்தத்தாலான தாயக்கட்டை

சுமார் 2,500 வருடங்களுக்கு முன்னர் மதுரையில் அரங்கேறியது இது என்றால், நம்புவீர்களா? ஆனால், இந்தப் பொருட்கள் அத்தனையும் மதுரையில் இப்போது நடக்கும் அகழாய்வில் கிடைத்திருக்கின்றன. ஒரு சங்க காலக் குடியிருப்புக்குள் நம் கற்பனைக்கு எட்டாத ஒரு வாழ்வை 2,500 ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்திருக்கிறார்கள் மதுரை மாந்தர்கள். இங்கு கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் ஏற்படுத்தும் ஆச்சர்யத்தைவிட, கூடுதல் ஆச்சர்யத்தை ஏற்படுத்தும் செய்தி ஒன்று உண்டு. அதுதான் அகழாய்வு நடக்கும் இடம்.

ஆனந்த விகடனில் வெளியான "வைகை நதி நாகரிகம்" என்ற சு.வெங்கடேசன் அவர்களின் கட்டுரையின் முன்னுரை பகுதி
ஆனந்த விகடன் கட்டுரை - ஜூலை 29, 2015
[http://www.vikatan.com/article.php?module=magazine&aid=108524]

# தமிழர்களின் விளையாட்டு

- முனைவர் எம். எஸ். மதிவாணன்

---

**தமிழர்களின் விளையாட்டு:**

*தமிழர்களின் விளையாட்டு எத்தனை என்பது தெரியுமா?*

*விளையாட்டு என்றால் கிரிக்கெட் என்பதும் சில இடங்களில் கால்பந்து கொஞ்சம் பணம் சேர்ந்து விட்டால் காலை இறகுபந்து விளையாடுவதும் அப்படியே இல்லை என்றாலும் கணினியில் விளையாடுவதும் இது தான் விளையாட்டு என்றாகி விட்டது. பணம் சம்பாதிக்கவே விளையாட்டு என்றாகி விட்ட நிலையில் தமிழர்களால் விளையாடப்பட்ட பல விளையாட்டுக்கள் இன்று அழிந்து போய் வருகிறன. . இதில் பல விளையாட்டுகள் இன்று எவராலும் விளயாடப்படுவதில்லை. சிறுவர் (பையன்கள்) ஆண், பெண் என இரு பாலருக்கும், அணி விளையாட்டு என பல வகை இருந்துள்ளது. நான் படித்து எனக்கு கிடைத்த அந்த பட்டியலை பதிவாகத் தருகிறேன்.*

*இனி இந்த விளையாட்டை விளையாட ஆசைப் படுவீர்கள்.*

*வகையாய் பிரிக்கப் பட்டுள்ளது.*

**சிறுவர் (பையன்கள்)**

*கைத்திறன்:*
1. அச்சுப்பூட்டு
2. கிட்டிப்புள்
3. கோலிட
4. குச்சி விளையாட்டு (எல்லா வயதினரும், ஆண் பெண் இருபாலாரும்)
5. குதிரைக் கல்லு
6. குதிரைச் சில்லி
7. சச்சைக்காய் சில்லி
8. சீச்சாங்கல்
9. தெல்லு (தெல்லுருட்டான்)
10. தெல்லு (தெல்லு எறிதல்)
11. பட்டம்
12. பந்து, பேய்ப்பந்து
13. பம்பரம்
14. மல்லு
15. வில்லுக்குச்சி
16. கோடுகிழித்து ஆடும் குண்டு (பூந்தா) /கோலி விளையாட்டு
17. குழி பறித்து ஆடும் குண்டு.(சிறு குழிக்குள் விரலால் அடித்துக் கொண்டுவந்து சேர்த்தல்) /கோலி விளையாட்டு

*கால் திறன்:*
1. ஆனமானத் திரி
2. கரணப்பந்து
3. குதிரைக்குக் காணம் காட்டல்
4. கொக்கு விளையாட்டு
5. கோழிக்கால்
6. தை தக்கா தை
7. நடைவண்டி ஓட்டம்
8. நொண்டி
9. பச்சைக் குதிரை
10. பொய்க்கால் நடை, கொட்டாங்குச்சி நடை
11. மந்தி ஓட்டம்
12. மாட்டுக்கால் தாண்டல்
13. மூக்குப்பிடி (துரத்திப் பிடி)

*அணி விளையாட்டு:*
1. ஓடுசிக்கு
2. சூ விளையாட்டு
3. நாடு பிரித்து
4. பந்து, பிள்ளையார் பந்து
5. பூச்சொல்லி
6. மதிலொட்டி
7. மந்திக் குஞ்சு
8. வண்டி உருட்டல்

*குழு விளையாட்டு:*
1. அணில் பிள்ளை
2. ஆடும் ஓநாயும்
3. உயிர் கொடுத்து

*4. கல்லுக்குச்சி*
*5. காக்கா கம்பு*
*6. காக்கா குஞ்சு*
*7. குச்சிக்கல்*
*8. குரங்கு விளையாட்டு*
*9. கோட்டான் கோட்டான்*
*10. கோழிக்குஞ்சு*
*11. தவளை விளையாட்டு*
*12. நாலுமூலைக் கல்*
*13. மரக்குரங்கு*
*14. வண்ணான் தாழி*
*15. வண்ணான் பொதி*

*நீர் விளையாட்டு:*
*1. காயா பழமா*
*2. நீரில் தொடல்*
*3. நீரில் விழுதல்*

*கண்டுபிடி:*
*1. உருண்டை திரண்டை*
*2. சீப்பு விற்கிறது*

*உல்லாசம்:*
*1. ஊதல்*
*2. கால் தூக்கிற கணக்கப்பிள்ளை*
*3. சீத்தடி குஞ்சு*
*4. தோட்டம் (விளையாட்டு)*
*5. பஞ்சு வெட்டும் கம்போடா*

**சிறுமியர்**

*உடல்-திறன்:*
*1. சில்லு (சில்லி)*

*கைத்திறன்:*
*1. கல் பிடித்தல்*
*2. சுண்டு முத்து*
*3. தட்டாங்கல்*

*உல்லாசம்:*
*1. இதென்ன மூட்டை*
*2. கிளி செத்துப்போச்சு*
*3. ஊதாமணி*
*4. என் உலக்கை குத்து குத்து*
*5. ஒருபத்தி இருபத்தி*
*6. ஒளிதல்*
*7. குச்சு குச்சு ரங்கம்மா*
*8. குறிஞ்சி வஞ்சி*
*9. கொடுக்கு*
*10. சிறுவீடு விளையாட்டு*
*11. சோத்துப்பானை (சோற்றுப்பானை)*
*12. ராட்டு பூட்டு*
*13. தவிட்டுக் குஞ்சு*
*14. பிஸ்ஸாலே பற*
*15. பூசனிக்காய் விளையாட்டு*
*16. பூப்பறி விளையாட்டு*
*17. பூப்பறிக்க வருகிறோம்*
*18. பூப்பூ புளியம்பூ*
*19. மச்சிலே யாரு*
*20. மத்தாடு*
*21. மோரு விளையாட்டு*
*22. வேடிக்கை விளையாட்டு*

*கலை விளையாட்டு:*
*1. கும்மி*

**இருபாலர் - இளைஞர்**

*உடல் திறன்:*
*1. ஊதுமுத்து*
*2. உயிர் எழுப்பு*
*3. ஐந்து பந்து*
*4. எலியும் பூனையும்*
*5. கல் எடுத்தல்*
*6. கல்லா மண்ணா*
*7. கல்லுக் கொடுத்தான் கல்லே வா*
*8. குஞ்சு விளையாட்டு*
*9. குத்து விளையாட்டு*
*10. துரத்திப் பிடி*
*11. தூண் விளையாட்டு*
*12. தொடு விளையாட்டு*
*13. நாலு மூலை விளையாட்டு*
*14. நிலாப்பூச்சி*
*15. நெல்லிக்காய் (பாடித் தொடுதல்)*
*16. பாரிக்கோடு*
*17. புலியும் ஆடும்*
*18. மரங்கொத்திஞ*

*19. மல்லர் கம்பம்*
*20. மலையிலே தீப்பிடிக்குது*
*21. மாங்கொழுக்கட்டை*
*22. காலாட்டுமணி கையாட்டுமணி*

*உல்லாசம்:*
*1. ஊஞ்சல்*
*2. ஈசல் பிடித்தல்*
*3. உப்பு விற்றல்*
*4. ஒருகுடம் தண்ணி ஊத்தி – விளையாட்டு*
*5. கரகர வண்டி*
*6. கள்ளன் போலீஸ்*
*7. காற்றாடி*
*8. கிய்யா கிய்யா குருவி*
*9. கிழவி விளையாட்டு*
*10. கிறுகிறு மாம்பழம்*
*11. குலையா குலையா முந்திரிக்காய்*
*12. சங்கிலி விளையாட்டு*
*13. தட்டான் பிடித்தல்*
*14. தட்டை*
*15. நடிப்பு விளையாட்டு (தண்ணீர் சேந்துகிறது)*
*16. பந்து, எறிபந்து*
*17. பந்து, பிடிபந்து*
*18. பன்னீர்க்குளம் (விளையாட்டு)*
*19. பூக்குதிரை*
*20. வண்டி உருட்டல்*

*உத்தித் திறன்:*
*1. உப்பு வைத்தல்*
*2. எண் விளையாட்டு*
*3. ஓடுகுஞ்சு*
*4. கண்ணாம்மூச்சி*
*5. கிச்சுக் கிச்சுத் தாம்பலம்*
*6. கொப்பரை கொப்பரை*
*7. தந்தி போவுது தபால் போவுது*
*8. நிலாக் குப்பல்*
*9. பாக்குவெட்டியைக் காணோமே*
*10. மாது மாது*

*ஊழ்த்திறன் (திருவுளம்):*
*1. ஒற்றையா இரட்டையா*
*2. கண்கட்டி விளையாட்டு*
*3. மோதிரம் வைத்தல்*
*4. ராசா மந்திரி*

*பட்டவர் தெரிவு:*
*1. ஓ... சிய்யான்*
*2. பருப்பு சட்டி (விளையாட்டு)*
*3. புகையிலைக் கட்டை உருட்டுதல்*

**காளையர்**

*1. அடிமுறை*
*2. இளவட்டக்கல்*
*3. கிளித்தட்டு*
*4. சடுகுடு (கபடி)*
*5. சல்லிக்கட்டு (பாய்ச்சல் காளை)*
*6. சிலம்பம்*

**கன்னியர்**

*1. அம்மானை*
*(ஒருவர் ஆடுவது சங்ககாலப் பந்து விளையாட்டு. மூவர், ஐவர் எனக் கூடிப் பாட்டுப் பாடிக்கொண்டு அடுவது அம்மானை விளையாட்டு)*

**முதியோர்**

*1. ஆடுபுலி*
*2. ஓட்டம்*
*3. கட்ட விளையாட்டு*
*4. கைச்சில்லி*
*5.சூது தாயம்*
*6. தாயம்*
*7. திரிகுத்து*
*8. துரும்பு*
*9. நட்சத்திர விளையாட்டு*
*10. பரமபதம் (விளையாட்டு)*
*11. பல்லாங்குழி*
*12. முக்குழியாட்டம்*

**பாப்பா விளையாட்டு**

*1. அந்தக் கழுதை இந்தக் கழுதை*

*2. அய்யன் கொம்பு*
*3. அட்டலங்காய் புட்டலங்காய்*
*4. அத்தளி புத்தளி*
*5. உப்பு மூட்டை*
*6. கிள்ளாப் பறண்டடி*
*7. தட்டலங்காய் புட்டலங்காய்*
*8. தென்னைமரம் விளையாட்டு (ஐலேலம் ஐலகப்பல் விளையாட்டு)*
*9. நடைவண்டி*
*10. நான் வளர்த்த நாய்க்குட்டி*
*11. பருப்பு கடை (விளையாட்டு)*

**எல்லாரும் விளையாடும் விளையாட்டு**

*கலை விளையாட்டு:*
*1. கரகம்*
*2. கழியல்*
*3. கழைக்கூத்து*
*4. காவடி*
*5. கோக்கழிக் கட்டை*
*6. வர்மம்*

*தெய்வ ஆடல்கள்:*
*(மக்கள் ஆடல்கள் / விழா விளையாட்டு)*
*1. உரிமரம்*
*2. உரியடி*
*3. கார்த்திகை விளக்கு*
*4. கார்த்திகைச் சுளுந்து*
*5. தைப்பாவை*
*6. பரணி பரணி*
*7. பாரி வேட்டை*
*8. பானை உடைத்தல்*
*9. புலியாட்டம்*
*10. பொம்மைச்சீட்டு*
*11. மஞ்சள் நீர் விளையாட்டு*
*12. மாட்டுப் பந்தயம்*
*13. மூணுகட்டை*
*14. மோடி விளையாட்டு*

*சொல் விளையாட்டு:*
*1. கேலி*
*2. பூக்குதிரை*
*3. பூச்சொல்லி*
*4. மொழி விளையாட்டு*
*5. ரானா மூனா தண்டட்டி*



தொகுப்பு: முனைவர். எம். எஸ். மதிவாணன்
*(ssmmathivanan@gmail.com)*

# பிள்ளைவிளையாட்டு: சொட்டாங்கல் !

*- முனைவர் இரா. மலர்விழிமங்கையர்க்கரசி*



ஆத்துத்தண்ணீல ஆட்டம்போட்டு

மாஞ்சுமாஞ்சு மண்ணுலஅலஞ்சு

அச்சுஅச்சாக் கூழாங்கல்லுப்பொறுக்கி

அடிப்பாவாடையில சேகரிச்சுஅள்ளிக்கிட்டு

அப்படியேவீடுவந்து கொட்டிவிட்டா

முத்தம்பூராவும் முழுசா ரொம்பீரும்.!

ஒத்தக்கல்ல ஒசரமாச்சொடுக்கி அது

தரஎறங்குமுன்ன தடவிஎடுக்கணும்

எடுக்கறகல்லவிட்டு அடுத்தகல்லுல கை

அலுங்னா அம்புட்டுத்தேன் அவுட்டு

அடுத்தாளுக்கு ஆட்டபோரும்புள்ள ஆத்தாடி.!

இப்புடியே கிழக்கப்பாத்து ஒருஆளும்

மேக்கபாத்துஒருஆளுமா அப்புடியே

சொடுக்கி சொடுக்கிக் கல்லெடுத்து

இடதுஓரமாக் குவிச்சுக்கிட்டேவரவர

எரணிநேரமாயிரும் கடைசிக்கல்லெடுக்க!

விளக்குவக்கறதுக்குள்ள
வீடுபோய்ச்சேந்துறணும்

எண்ணிப்பாத்துக் கணக்குக்கழிச்சு எந்திருச்சா

எங்கேயிருக்கோமுன்னே
எவருக்கும்தெரியாது

வீட்டுக்குள்ளே பெண்களைப் பூட்டிவைக்கும்

விந்தைமனிதரின் பொன்னான
கண்டுபிடிப்புத்தேன்

பிள்ளைவிளையாட்டு சொட்டாங்கல்லு ஊ
ஊ ஊ

கல்லுல்லா,,,,கல்லுல்லா.____கல்லுல்லா!

*picture source: @ Sengai Podhuvan*
*http://upload.wikimedia.org/wikipedia/commons/thumb/a/a6/Game_paandi_7.jpg/800px-Game_paandi_7.jpg*



பேராசிரியர் முனைவர் இரா.
மலர்விழிமங்கையர்க்கரசி
*malarmangay64@gmail.com*

# தேன் சொட்டும் சொட்டாங்கல்

- கவிஞர் ருத்ரா



**© ஓவிய ஆசிரியர் நல்ல. காசிராஜன்**

***http://nallakasirajan.blogspot.com/***

கூழாங்கல்

பிஞ்சு விரல்களில்

பரிணாமம் கொண்டது

வைரங்களாய்.

பாட்டோடு

சொட்டு சொட்டாய்

தேன் சொட்டும் இந்த

சொட்டாங்கல்.

குட்டை குட்டையாய்

சீட்டிப்பாவாடை

மீட்டிய தெல்லாம்

மரகத வீணைகள்.

நம் வரலாறு

ஆயிரம் பக்கங்களில் இல்லை

இந்த ஒலிப்பிறைகள்

உதிர்த்ததே நம் காலப்பிரளயம்.



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்

ruthraasivan@gmail.com

# சொட்டாங்கல் விளையாடும்போது பாடப்படும் பாடல்

*ஒண்ணான்:*
*ஓரி உலகெலாம் உலகெலாம் சூரியன்*
*சூரியன் தங்கச்சி சுந்தர வல்லிக்கி*
*நாளக் கழிச்சிக் கல்யாணம்.*

*இரண்டான்:*
*ஈரிப்புச் செண்டுப்பூ;*
*ஈரிப்புச் செண்டுப்பூ இருதலையும் முல்லப்பூ*
*சூடிமுடிப்பவர்க்கு கொண்டையெலாம்*
*தாழம்பூ.*

*மூன்றான்:*
*மூவன்னா ராவணா;*
*மூவன்னா ராவணா*
*சாதி பிராமணா.*

*நான்கான்:*
*நாலவெச்சு ரெண்டெடு;*
*நாலவெச்சு ரெண்டெடு*
*நாராயிணன் பேரிடு*
*பேரச்சொல்லி பிச்சையெடு.*

*ஐந்தான்:*
*அஞ்சலம் குஞ்சலம்;*
*அஞ்சலம் குஞ்சலம்*
*தம்பி சிதம்பரம்*
*தங்கச்சிமாப்பிளை வெண்கலம்.*

*ஆறான்:*
*ஆறு குறுகுறு:*
*ஆறு குறுகுறு*
*அன்னத்தாய் பேரிடு.*

*ஏழான் -தெரியவில்லை.*

*எட்டான் -தெரியவில்லை.*

*ஒன்பதான்:*
*ஒம்பந்தம்மா சாவாளோ;*
*ஒம்பந்தம்மா சாவாளோ*
*சாகும்போது ஏவாளோ*
*சங்குச்சத்தம் கேட்பாளோ.*

*பத்தான்:*
*பத்தேபதிச்சுக்கோ;*
*பத்தேபதிச்சுக்கோ*
*வயித்தநெறிச்சுக்கோ*
*சொக்கலிங்கநாதருக்கு*
*சோத்தவடிச்சுக்கோ.*

*கட்டை:*
*கட்டேகட்டே டேசிகா;*
*கட்டேகட்டே டேசிகா கம்மங்கட்டே டேசிகா*
*கொக்கக்கொரிச்சுவா*
*கோழிமுட்டையிட்டுவா*
*நித்தங்குளிச்சுவா நீலப்பட்டுடுத்திவா*
*புதுக்கட்டை ஒண்ணு.*

---

*தட்டாங்கல் ஆட்டம் பாடல்:*
*https://ta.wikipedia.org/s/ur1*

# கவுதம் சன்னாவுடன் ஓர் நேர்காணல்

**கவுதம் சன்னா**வுடன் பேட்டி: பேட்டி எடுப்பவர் - எடின்பர்க் பல்கலைகழகத்தை சேர்ந்த **ஹ்யூகோ கொரிங்கே** அவர்கள்.

**பேரா யூகோ:** *தலித்துகளின் தற்போதைய நிலை என்ன? அது மட்டுமல்ல. இது திராவிட மண். இங்கே அரசியல்வாதிகள் ஜாதி ஒழிப்பைப்பற்றி பெரியார் காலத்திலிருந்து பேசி வருகிறார்கள். இந்த (திராவிட) மண்ணில் தலித் இயக்கங்கள் அவசியம் தானா?*

**கவுதம் சன்னா**

**சன்னா:** இந்த மாநிலம் மட்டுமில்லை. இந்தியா முழுக்க தலித் இயக்கங்களுக்கான அழுத்தமான தேவை இருக்கிறது. ஏன் என கேட்டால் இது ஈவேரா பூமியெனினும் தலித் எழுச்சி வரலாறு 150 ஆண்டுகளுக்கும் முன்பிருந்தே இருக்கிறது. 1777ல் சென்னையில் ஒரு பெரிய கிளர்ச்சி நடைபெற்று அதைப்பற்றி இரட்டைமலை சீனிவாசன் தன் சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். அப்போது சென்னை செயிண்ட் ஜார்ஜ் கோட்டையில் தலித் ஒருவரின் மரணத்துக்காக ஒரு விசாரணை நடைபெற்று, அதன்பின் கலவரமும் ஏற்பட்டுள்ளது. இதனுடன் சேர்த்து தலித் எழுச்சியும், விழிப்புணர்வும் ஏற்பட்டுள்ளது. அன்றில் இருந்து தொடர்போராட்டங்கள் இருந்தாலும் அவை ஒருங்கிணைக்கபடாதது மாற்றம் வருவதற்கான வாய்ப்பை தடுத்துவிட்டது. 1840ல் ஆதிதிராவிடன் எனும் வார்த்தை "பூர்வகுடி திராவிடன்" எனும் பொருள் தரும் வகையில் அறிமுகம் ஆகிறது. 1880ல் ஆதி திராவிடர் மகாஜன சபையும், 1890ல் பறையர் மகாஜன சபையும், 1891ல் திராவிடர் மகாஜன சபையும் உருவாகின்றன. ஆக 1880ல் இருந்து 1891க்குள் மூன்று முக்கிய இயக்கங்கள் உருவாகியுள்ளன. இன்றைய தலித் இயக்கங்கள் எல்லாமே இவற்றின் வாரிசுகள் தான். இன்றைய இயக்கங்கள் எழுப்பும் கோரிக்கை அன்றைய இந்த மூன்று இயக்கங்களும் எழுப்பிய கோரிக்கைகளே. பெரியார் முதலான தலைவர்கள் இந்த காலக்ட்டங்களின் மத்தியில் வந்து போன தலைவர்களே. பெரியாருடன் நின்றுவிடாமல் நாம் இன்னமும் கூட பல பெயர்களைக்குறிப்பிடவேண்டும்

1845ல் இருந்து 1880 வரை தலித்துகளுக்காக உழைத்த ஏராளமான தலைவர்கள் இருந்தார்கள். வி அயோத்திதாச பண்டிதர் (இவர் கே அயோத்திதாச பண்டிதரின் ஆசிரியர்), புலவர் வைரக்கண் வேலாயுதம், வெங்கிடசாமி பண்டிதர், ஆரண்யகதாச பண்டிதர், மைலியா சின்னதம்பி, புலவர் மற்றும் நாவலாசிரியர் பி.ஏ.ஏ ராஜேந்திரம் பிள்ளை மற்றும் சாங்கு சித்த சிவலிங்க நாயனார். இந்த தலைவர்கள் தலித் மக்களை சமூக நீரோட்டத்தில் கலக்க வைத்து எதிர்காலத்துக்கு வித்திட்டார்கள். சுபிக்ஷார சங்கம், பூர்வதமிழ் அபிமான சங்கம், பஞ்சமர் கல்வி சங்கம், மற்றும் ஆதுரலர் அபிவிருத்தி சங்கம் ஆகியவற்றின் காலக்ட்டத்திலும் தலித் மக்களை திரட்டும் முயற்சி நடைபெற்றது

*இந்த தலைவர்களின் முயற்சி இவர்களது நோக்கங்களை முன்னெடுக்கும் பின்னாளைய தலைவர்கள் உருவாக வழிவகுத்தது. முக்கிய தலைவர்களாக அயோத்திதாசர் (தென்னாட்டின் முதல் சமூகசீர்திருத்தவாதியான இவர் சாதியற்ற திராவிடர்களின் இயக்கத்தைத்துவக்கினார்) மற்றும் இவரது நண்பர் டி. ஜான் ரத்தினம் (இவர் முதல்முதலாக திராவிடர் கழகத்தை துவக்கி திராவிட பாண்டியன் இதழையும் 1887ல் நடத்தினார். இதன் பின்னரே ஈவேரா தனது திராவிடர் கழகத்தை துவக்கினார்) ஆகியோரைக்கூறலாம்.*

*இக்காலகட்டத்தைசேர்ந்த மற்ற தலைவர்களாக பி.எம் மதுரா பிள்ளை, பி. வெங்கடாசல சுப்பிரமணியம், மயிலை சின்னதம்பி, ஸ்வாமி அரண்கைய தாசர் (மூன்றாவது தலித் பத்திரிக்கையான சுகிர்த வாசினியின் ஆசிரியர்), ஓ. பழனிசாமி, ஓம்பிரகாச ஸ்வாமி, வி சி வாசுதேவ பிள்ளை, ஸ்வாமி தேசிகானந்தா, எம்.சி மதுரா பிள்ளை, வி தர்மலிங்கம் பிள்ளை ஆகியோர் ஆதிதிராவிடர் மகாஜன சங்கத்தையும், எல்.சி குருசாமி, எச்.எம் ஜெகன்னாதன் ஆகியோர் அருந்ததியரையும் இவ்வியக்கத்தில் பிரதிநிதிப்படுத்தினார்கள்.*

*1910களின் துவக்க வருடங்களில் கே அப்பாதுரை, புலவர் பெரியசாமி, ஆர் வீரய்யன் முதலானோர் முதன்மையாகவும், 1920ல் எம் சி ராஜா இந்திய அளவில் ஒடுக்கப்பட்டோர் சங்கத்தின் முதல் தலித் தலைவராகவும் இருந்தார்கள். 1930ல் ஸ்வாமி சகஜானந்தர், பி.எம். வேலாயுதபாணி, வி.ஐ முனுசாமிப்பிள்ளை, என். சிவராஜ், அன்னை மீனாம்பாள் (இந்தியாவின் முதல் தலித் பெண் தலைவர்), ஜோதி வெங்கிட செல்லம் மற்றும் பி. பரமேஸ்வரன் ஆகியோர் தலித்துகளுக்காக அம்பேத்கரால் உந்தபட்டு பணியாற்றினார்கள். ஆக தமிழ்நாட்டில் தலித் எழுச்சிக்கு செறிவான ஒரு வரலாறு இருக்கிறது.*

*இவர்களில் கொள்கைரீதியான அடிப்படையில் தலித் எழுச்சியை முன்னெடுத்தவராக அயோத்திதாசரைக் கூறலாம். அவர் ஜாதியை மறுத்தவர்களையே தமிழராகவும், திராவிடராகவும் கருதினார். ஜாதி இருக்கிறது என்றவர்களை அவர் தமிழராக ஏற்கவில்லை. அவர் சமூகத்தில் "ஜாதி இருக்கிறது என்பவர்கள்- இல்லை என்பவர்கள்" என இரு பிரிவாக பிரித்தார். தலித்- தலித் அல்லாதவர் என்ற இருபிரிவாக கூட அவர் பிரிக்கவில்லை. ஆக தென்னாட்டில் சுயமரியாதை இயக்கத்தின் முன்னோடி அயோத்திதாசரே. ஆக தமிழ்நாட்டில் மட்டும் இன்றி இந்தியா முழுக்க தலித் இயக்கங்கள் தம் முயற்சியை முன்னெடுக்க வேண்டி உள்ளன. இக்கோரிக்கைக்ள் 1880களில் இருந்து எழுப்பபட்டு வருகின்றன. அயோத்திடகசை 1891ல்லேயே முதல் பெட்டிசனை போடுகிறார். இக்கோரிக்கைகள் அன்றுபோலவே இன்றும் முக்கியமானவையாக உள்ளன. ஆக தலித் இயக்கங்களின் அவசியம் இன்றும் உள்ளது.*



Figure 2: Dalit leaders from left to right: Ayothidassar, N. Sivaraj, Meenambal, Gurusamy, Jeganathan

**பேரா யூகோ:** *பெரியாரிய இயக்கங்களும் நடுவே வந்த இயக்கங்களும் முந்தைய இயக்கங்களின் வரலாற்றை மறைத்துவிட்டனவா? நாம் அயோத்திதாசரையும் பிற தலைவர்களைப்பற்றியும் பேசுவதில்லை. பெரியார் மேலேயே கவனம்*

*செலுத்துகிறோம். எங்கே பார்த்தாலும் பெரியார் சிலைகளும், படங்களுமே இருக்கிறதே ஒழிய இரட்டைமலை சீனிவாசன், அயோத்திதாசர் ஆகியோரது சிலைகளும், படங்களும் மிக அரிதாகவே காணக்கிடைக்கின்றன.*

***சன்னா:*** *ஆம்*

**பேரா யூகோ:** *திராவிட இயக்கங்களின் வரவால் பழைய தலித் இயக்கங்க்ளை நாம் மறந்துவிட்டோமா?*

***சன்னா:*** *இதை நாம் திராவிட இயக்கத்தின் நன்மைகள், தீமைகள் என்ற இருவிதங்களாக பிரித்துப்பார்த்து புரிந்துகொள்ளலாம். சற்று விரிவாக பேசவேண்டிய விஷயம் இது. திராவிட இயக்கம் 1917ல் துவங்கியது என ஏன் அனைவரும் கூறுகிறார்கள்? 1912ல் சென்னையின் மேல்சாதி வியாபாரிகளும், நிலக்கிழார்களும் கைகோர்த்து தென்னிந்திய வணிகர் சங்கம் எனும் அமைப்பை துவக்கினார்கள். அது 1916ல் தென்னிந்திய நல உரிமைச்சங்கமாக 1916ல் மாறுகிறது. இது பின்னாளில் நீதிக்கட்சியாக மாறுகிறது. திராவிட இயக்கத்தின் வரலாறு இதுதான். அவர்களின் தொடக்ககாலக்குறிக்கோள் என்னவென கேட்டால் அது தலித் விடுதலையாக இல்லை. அதற்காக அவர்கள் இயக்கத்தில் சேரவும் இல்லை. முதல்முதலாக நீதிக்கட்சி வெளியிட்ட சாசனத்திலும் பிந்தங்கிய மக்களின் அடிப்படைதேவைகள் பூர்த்தி செய்யபடவேண்டும் எனத்தான் உள்ளதே ஒழிய , உரிமைகளைப்பற்றி எதுவும் கூறப்படவில்லை. ஆக அவர்களின் அடிப்படை நோக்கம் என்னவெனப்பார்த்தால் பிராமணர்கள் வெள்ளையருடன் (ப்ரிட்டிஷ் அரசு) கூட்டு சேர்ந்து அரசியல் அதிகாரத்தில் ஒரு பங்கை அடைந்துவிட்டார்கள். அந்த அதிகாரத்தில் ஒரு பங்கை அடையவே பார்ப்பனரல்லாதோர் இயக்கம் துவக்கபட்டது. அவர்கள் விரும்பியது அதிகாரமும், அதிகாரத்தை அடைவதற்கான ஒரு அடிப்படையுமே தங்களுக்கு நியாயமாக கிடைக்கவேண்டிய அதிகாரம் மறுக்கப்பட்டதாகவும், அதை அடைய சமூகநீதி எனும் காரணத்தை முன்வைத்து அதிகாரத்தில் தமக்கான உரிமைகளை அவர்கள் கோரினார்கள்.*

*இந்த அடிப்படையில் அவர்கள் திரண்டதாலேயே நீதிக்கட்சிக்கு அன்று அடையாளம் கிடைத்தது. ஆனால் இது உருவான விதத்தை வைத்துப்பார்த்தாலே தமக்கும் கீழ் இருக்கும் தலித் மக்களை உயர்த்த அவர்கள் முன்வருவார்கள் என நாம் எதிர்பார்க்க முடியாது. அவர்களுக்கு பொதுவான சமூகநீதியில் துளியேனும் ஆர்வம் இருந்திருந்தால் 1921ல் வந்த கோயில் நுழைவு மசோதாவை தோற்கடித்திருக்க மாட்டார்கள். ஆனால் அன்று அந்த கோயிலில் நுழையும் மசோதாவை தோற்கடித்தது அவர்களே.*

*கோயில் நுழைவு மசோதாவுக்கு எதிராக ஒன்றாக திரண்டு அது தோற்பதை உறுதி செய்தார்கள். பின்னாளில் (தலித் தலைவர்களான) இரட்டைமலை சீனிவாசன், எம்.சி. ராஜா ஆகியோரின் இடைவிடாத அழுத்தம் காரணமாகவே அந்த மசோதா நிறைவேறியது. அடித்தட்டு மக்களை முன்னேற்ற அன்று தொழிலாளர் கமிஷன் ஒரு நிதியை உருவாக்கச்சொல்லி வலியுறுத்தியது. பதவிக்கு வந்ததும் இவர்கள் செய்த முதல் வேலை அந்த நிதிக்கான ஒதுகீட்டைக்குறைத்ததுதான். அந்த நிதியை தொடர்ந்து குறைத்துக்கொண்டே வந்து, அதை சுத்தமாக காலி செய்து அடித்தட்டு மாணவர்கள் படிப்பதற்கான வாய்ப்புகளை சுத்தமாக ஒழித்தார்கள்.*

*இவர்கள் சமூகத்தை மூன்று பிரிவாக பிரித்ததைக்காண்கிறோம். பார்ப்பனர், பார்ப்பனர் அலலதோர், தலித். இத்தகைய பிரிவினையால் அன்றும், இன்றும் கடுமையாக பாதிக்கப்பட்டவர்கள் ஒடுக்கப்பட்டோரே.*

*பெரியாரிய இயக்கம் ஒடுக்கப்பட்டோருக்கு எதாவது உருப்படியான நன்மையைச் செய்தது எனும் கண்ணோட்டமே போலியானது.*

*அதன்பின் பெரியார் திராவிட இயக்கத்தில் சேர்ந்து சுயமரியாதை இயக்கத்தைத்துவக்கி ஒடுக்கப்பட்டோரை ஒன்றிணைக்க முயன்றார். அதில் சிறிதளவு அவர் வெற்றி பெற்றாலும் சமூகம் அன்று இயங்கிய பழைய மாடலிலேயே அவர் இயங்கி அதற்கே உண்மையானவராக இருந்தார். அதைத்தாண்டி அவரால் செல்ல முடியாதற்கு காரணம் அன்று ஒடுக்கபட்ட மக்களுக்கு தலைவர்கள் இருந்ததால் அவர்களைத்தாண்டி இவரை அவர்களால் ஏற்க முடியவில்லை.*

*திராவிட இயக்கம் தலித் அல்லாதோரை மையமாக வைத்தே உருவானதால் ஒடுக்கப்பட்டோரை அதில் சேர்க்க சமூகரீதியான தடைகள் அவர்களுக்கு இருந்தன. அவர்களது விருப்பம் என்னவாக இருந்திருந்தாலும், ஒடுக்கபட்டோருக்கும், பார்ப்பனரல்லாதோருக்கும் இடையே உள்ள சமூகத்தடைகள் ஒடுக்கப்பட்டோரை இவ்வியக்கத்தில் சேர்க்க தடையாக இருந்தன. அதன்பின் திராவிட இயக்கம் வலுவான அரசியல் சக்தியாக மாறுகிறது. 1939ல் திராவிடர் கழகம் பிறக்கிறது. 1949ல் திமுக பிறக்கிறது.*

*1939ல் இருந்து 1949ல் அரசியலில் நுழைந்து அதிகாரத்தைப்பிடிக்க அவர்கள் முனைந்த இந்தப்பத்தாண்டு காலத்தில் அதிகாரத்தைப்பிடிக்க திராவிட அடையாளத்தை முன்வைத்தே அவர்கள் மக்களைத்திரட்டினார்கள். இந்த நிலையிலும் ஒடுக்கப்பட்டோரின் அடையாளத்தை அவர்கள் வெளிவரவிடாமல் மறைத்தே வந்தார்கள். ஒடுக்கப்பட்டோரின் அடையாளம் அவர்களுக்கு அன்று அவசியமானதாக இல்லை. ஒடுக்கபட்டோர் தம் அடையாளத்தை ஒட்டுவங்கியாக மாற்றாவிடில் அவர்களுடன் ஒன்றிணைய திராவிட இயக்கங்களுக்கு எந்த அவசியமும் இல்லை.*

*ஆக பார்ப்பனரல்லாதோர் இயக்கம் அன்று தலித் அடையாளத்துடன் நேருக்கு நேர் மோதி அதை ஒடுக்கும் நோக்கிலேயே சென்றது. நீதிக்கட்சி, திராவிடர் கழகம், ரிபப்ளிக்கன் கட்சி என அந்த இயக்கத்தின் எந்த வடிவிலும், எந்த வகையிலும் அவர்கள் ஒடுக்கட்டோரை ஆதரிக்கவோ, அவர்களுக்காக பாடுபடவோ முனையவே இல்லை. குறிப்பிட்டு சொல்லவேண்டுமெனில் அக்காலத்தில் வெளிவந்த காண்டீபம் எனும் பத்திரிக்கையை நான் படிக்கையில் "வடநாட்டவரான அம்பேத்காரை தென்னாட்டுக்கு ஏன் அழைக்க வேண்டும்?" என எழுதப்பட்டிருந்ததை படித்தேன். ஆக இப்படித்தான் அவர்கள் அன்று பேசிவந்தார்கள். இந்த வகையில் அம்பேத்கரின் அடையாளத்தை மறைக்கவும் அவர்கள் முயன்றார்கள். பெரியாருக்கு அம்மாதிரி நோக்கம் இல்லையெனினும் திராவிட இயக்கத்தால் ஜாதியின் பிடியை விட்டு வெளியே வரமுடிந்ததில்லை. ஆக தெரிந்தோ, தெரியாமலோ திராவிட இயக்கம் தலித்துகளின் அடையாளத்தையும், அரசியலையும், சமூக வரலாற்றையும் ஒடுக்குவதில் மிகமுக்கியமான பங்கை வகித்தது.*

**பேரா யூகோ:** இதிலிருந்து இரு கேள்விகள் எழுகின்றன. நீங்கள் இரு விஷயங்களைக்குறிப்பிட்டீர்கள். முதலாவதாக, துவக்கத்திலேயே அயோத்திதாசர் ஜாதியை முன்நிறுத்தாது தமிழர் உரிமைகளுக்கும், சுதந்திரத்துக்கும் குரல் கொடுத்தார்.

***சன்னா:*** *தமிழர் உரிமைகளுக்கு குரல் கொடுத்தார் என்பதை விட தமிழ் அடையாளத்தை முன்நிறுத்தி ஒடுக்கபட்ட மக்களின் உரிமைகளுக்கும் அவர்களின் சுதந்திரத்துக்கும் இவ்வகையில் போராடினார்.*

**பேரா யூகோ:** சரி. அதே சமயம் இரட்டைமலை சீனிவாசன் ஜாதியை வைத்தே மக்களை திரட்டினார் . இப்படி இதில் இரு வித சிந்தனைகள் இருக்கையில் தலித் கோட்பாடு தமிழ்நாட்டில் வேர் விட்டுள்ளதா? அல்லது, இன்னமும் ஜாதிதான் தலித் அரசியலில் முக்கிய பங்கு வகிக்கிறதா?

***சன்னா:*** *நீங்கள் தலித் உட்சாதி பிரிவுகள் பற்றிய விவாதங்களைக் குறிக்கிறீர்களா?*

***பேரா யூகோ:*** *ஆம்*

***சன்னா:*** *நீங்கள் சொல்லுவது உண்மை. தலித் எனும் அடையாளம் 1972க்கு பின்புதான் பரவலானது. 1972ல் இந்திய தலித் சிறுத்தைகள் அமைப்பு முதல்முதலாக தலித் எனும் வார்த்தையை தம்மைக்குறிக்க பயன்படுத்தியது. 1972விலேயே அது மராட்டியத்தில் பரவலானாலும் தமிழகத்தில் அச்சொல் அங்கீகாரம் பெற 1990 வரை ஆனது. 1990க்கு பிறகு இந்த ஒற்றைச்சொல் மாத்திரமே தலித்களை ஒன்றுபடுத்தி எழுச்சியை உருவாக்கியதாக நாம் கூற முடியாது. விழுப்புணர்வு அதிகமாகி இச்சொல்லை வைத்து அமைப்புகள் உருவாகின. இவ்வார்த்தை அரசியலில் பயன்படுத்தப்பட்டு பல்வேறு பறையர், பள்ளர். சக்கிலியர்/அருந்ததியரை பொதுவான ஒரு தளத்தில் ஒன்றுபடுத்தி தமிழக/ இந்திய அளவில் அரசியலுக்கு கொண்டுவந்தன. சமூக அளவிலும் இவவர்த்தையால் இதே விளைவுகள் உருவாகின எனக்கூற முடியாது. சமூக அளவில் பேசுவதானால் இது இன்னமும் நடைபெறவில்லை. ஆக பொதுவான ஒரு தலித் அடையாளத்தை உருவாக்குவதில் பெரிய முன்னேற்றம் காணும் நிலை இருப்பதாக தெரியவில்லை. இவர்கள் தலித் அடையாளத்தை முழுமையாக தழுவியதாகவும் கூற முடியாது. அதை அரசியல் நோக்கிலேயே பயன்படுத்துகிறார்கள். அதே சமயம் நீங்கள் சொல்லும் உட்சாதி உணர்வுகள்- பள்ளர், பறையர், சக்கிலியர் அடையாளங்கள்- இவை 6- 7 ஆண்டுகளுக்கு முன்பு முக்கியமானதாக இல்லை. ஆனால், இப்போது திராவிட கட்சிகளால் தூண்டிவிடபட்டு, இந்த உட்சாதி விவகாரங்கள் சமூகநீதி எனும் போர்வையில் பேசபட்டும், பிரசாரம் செய்யப்பட்டும் வருகின்றன. இத்தகைய உட்சாதி உணர்வுகளை தூண்டிவிடுவதில் திராவிட கட்சிகள் பெரும்பங்கு வகிக்கின்றன.*

***பேரா. யூகோ:*** *திராவிட கட்சிகள் மட்டுமல்ல, கம்யூனிஸ்டு கட்சிகளும் கூடத்தானே?*

***சன்னா:*** *ஆமாம். நாம் கம்யூனிஸ்டுகளையும் அதில் சேர்க்கலாம். இதில் வரலாற்றுரீதியாக செயல்படுவதாக அவர்கள் கூறினாலும், அவர்களின் செயல்பாட்டில் அத்தகைய வரலாற்று புரிதல் எதையும் அவர்கள் காட்டவில்லை. குறிப்பாக ஒடுக்கப்பட்டவர்களின் வரலாற்றை அவர்கள் புரிந்து கொள்ளவே இல்லை. அவர்கள் இன்னமும் மக்கள் ஊர் என்றும் சேரி என்றும் பிரிந்து கிடப்பதை புரிந்துகொள்ள முடியாமலேயே இருக்கிறார்கள். இதை முதலில் புரிந்துகொண்டால் தான் அவர்கள் இதற்கான தீர்வுகளை சிந்திக்க ஆரம்பிபபர்கள். நீங்கள் வரலாற்றைபுரிந்துகொள்ளாமல் பிரச்சனைகளை மட்டுமே பிரச்சாரம் செய்துவந்தால், எங்கிருந்து இப்பிரச்சனைகள் வந்தன என்பதை எப்படி அறிவது? அருந்ததியர்களுக்கு ஒரு விதமான பிரச்சனைகள் உள்ளன. பள்ளர்களுக்கு வேறு விதமான பிரச்சனைகள் உள்ளன. பறையர்களுக்கு இன்னொருவிதமான பிரச்சனைகள் உள்ளன. ஒவ்வொரு உட்சாதி பிரிவுக்கும் தனிப்பட்ட பிரச்சனைகள் உள்ளன. இதில் ஒரே ஒரு தனிபட்ட பிரச்சனையை அரசியல் நோக்கில் கையில் எடுக்கையில் அடுத்த உட்சாதியை நீங்கள் கைவிட்டு விடுகிறீர்கள். இதன்பின் சாதி அடையாளங்கள் நடைமுறை படுத்தப்படுகின்றன. அழிக்க நினைத்த நடைமுறைகள் இவ்வகையில் வலுப்பெறுகின்றன. இடைநிலை சாதிகளுக்கு இது பெருத்த அனுகூலமாக இருக்கிறது. இதற்கான முக்கிய காரணம் தலித் வரலாறு பற்றிய புரிதல் இல்லாததே.*

***பேரா யூகோ:*** *நீங்கள் இன்னொரு விஷயத்தைக் குறிப்பீட்டிர்கள். அயோத்திதாசரின் கோரிக்கைகள் இன்னமும் நிறைவேற்றப்படாமல் இருப்பதை.*

***சன்னா:*** *ஆம். அவை இன்னமும் நிறைவேற்றபடவில்லை.*

**பேரா யூகோ:** *ஆக, அப்படியானால் தமிழ்நாட்டில் இன்னமும் தீண்டாமை நிலவுகிறதா? இன்னமும் கொடுமைகள் நடக்கிறதா? இம்மாதிரி விஷயங்கள் இன்னமும் நிகழ்கிறதா?*

***சன்னா:*** *தீண்டாமையா? அதாவது ஒவ்வொரு கிராமமும் ஊர் என்றும் சேரி என்றும் பிளவுபட்டு கிடக்கின்றன. ஒடுக்கப்பட்டவர்களை ஏன் சேரிகளில் வைத்திருக்கிறார்கள்? ஏனெனில் அவர்கள் தீண்டதகாதவர்கள் என்பதால் தான். உலகெங்கும் கெட்டோக்கள் உள்ளன. கெட்டோ இல்லாத உலகநாடு எதுவுமே கிடையாது. சுற்றுபுற சீர்கேடு, மதசீர்கேடு என ஏதோ ஒரு சீர்கேட்டை காரணம் காட்டி இத்தகைய கெட்டோக்கள் உருவாக்கபடுகின்றன. சமூகம் முன்னேறமடைய, அடைய இந்த கெட்டோக்கள் இல்லாதொழிந்துள்ளன. இன்று கருப்பின அமெரிக்கர்களுக்கு கெட்டோக்கள் உள்ளன, ஆஸ்திரேலிய பூர்வகுடிகளுக்கான கெட்டோக்கள் உள்ளன ஆனால் ஊர் என்றும் சேரி என்றும் திட்டமிடப்பட்ட பிரிவினையை எங்கேயும் காண இயலாது. ஆக ஊரும், சேரியும் இருக்கும்வரை தீண்டாமை தொடர்ந்துகொண்டே இருக்கும். இதை நேருக்கு நேர் காண இயலுகிறது. உலகில் வேறு எந்த நாட்டிலும் இப்படி இத்தனை பகிரங்கமாக இனப்பாகுபாடு இருப்பதைக்காண இயலாது. ஆக தமிழகத்திலும் இந்தியாவிலும் இத்தகைய சூழல் இருக்கையில் தீண்டாமை ஒழிந்துவிட்டதாக நாம் எப்படிக்கூற இயலும்? தீண்டாமை அனைத்து வடிவங்களிலும் 100% தொடர்கிறது. இதுவே உண்மை.*

***http://www.southasianist.ed.ac.uk/article/view/147/88***

*Interview with Gowthama Sannah, Propaganda Secretary of the VCK, Chennai,*
*26th September 2012*
*by Hugo Gorringe*
*Dr. Hugo Gorringe (Hugo.Gorringe@ed.ac.uk)*

*J. Gowthama Sanna g.sannah@gmail.com or* ***http://gsannah.wordpress.com***



மொழியாக்கம்: செல்வன்

செல்வன்: *holyape@gmail.com*

# ராஜராஜ சோழனின் முதல் போர்

**-- ஆர். ஜெய்குமார்**

காந்தளூர்ச் சாலைப் போர், சோழப் பேரரசன் ராஜராஜ சோழன் ஆட்சிப் பொறுப்புக்கு வந்த பிறகு மேற்கொண்ட மிக முக்கியமான போர். கி.பி. 10ஆம் நூற்றாண்டில் நடந்த இந்தப் போர், முதலாம் ராஜராஜனுக்கும் சேர மன்னன் முதலாம் பாஸ்கர ரவி வர்மனுக்கும் இடையில் நடந்தது.

**காந்தளூர்ச் சாலை**

காந்தளூர்ச் சாலை என்பது இன்றைய கேரள மாநிலத்தில் திருவனந்தபுரத்துக்கு அருகில் வலிய சாலா என்னும் இடம் என ஆய்ந்தறியப்பட்டுள்ளது. இந்த இடம் முற்காலத்தில் ஒரு கல்விக்கூடமாக இருந்தது. இங்குப் பயிற்சி பெற்ற வீரர்கள் போர்த் திறன் மட்டுமல்லாது புத்திக்கூர்மையிலும் சிறந்து விளங்கியுள்ளனர்.

போர்க் கலைகள் மட்டுமின்றி போர் நுட்பங்களும், வியூகங்களும் கற்பிக்கப்பட்டு வந்துள்ளன. தனுர்வேதம் எனப்படும் வில்வித்தைப் பயிற்சி, களறிப்பயிற்சி, வர்மம் ஆகிய போர்க் கலைகள் போதிக்கப் பட்டுள்ளன. இவற்றோடு ராஜாங்க நிர்வாகமும் பயிற்றுவிக்கப்பட்டுவந்துள்ளது. இச்சாலையின் போதகர்கள் சட்டர்கள் என அழைக்கப்பட்டுள்ளனர். இச்சாலையின் தலைமைச் சட்டர் பொறுப்பு மதிப்பு மிக்க ஒன்றாகத் திகழ்ந்துள்ளது. தலைமைச் சட்டருக்கு ஓர் அரசனுக்குரிய மரியாதை வழங்கப்பட்டுள்ளது. இதிலிருந்து இச்சாலையின் முக்கியத்துவத்தை உணர்ந்துகொள்ள முடியும்.

இங்குப் பல்வேறு சிறு சிறு நாடுகளைச் சேர்ந்த சிற்றரசர்களும், படைத் தளபதிகளும், இளவரசர்களும் பயிற்சி பெற்றுள்ளனர். அக்கால கட்டத்தில் நடந்த பல முக்கிய அரசியல் நடவடிக்கைகளிலும், போர்களிலும் இச்சாலையின் பயிற்சி முக்கிய விளைவுகளை ஏற்படுத்தியதாகச் சொல்லப்படுகிறது .

**செங்கம் கல்வெட்டு**



*http://tamil.thehindu.com/multimedia/dynamic/01783/history__2__1783408g.jpg*

ராஜராஜ சோழனும் பாஸ்கர ரவி வர்மனும் கி.பி. 985ஆம் ஆண்டில் சோழப் பேரரசின் ஆட்சிப் பொறுப்புக்கு வந்தவர் ராஜராஜ சோழன். இவருடைய தந்தை சுந்தர சோழன் ஆவர். காந்தளூர்ச் சாலைப் போர் ராஜராஜனின் முதல் போராகப் போற்றப்படுகிறது.

பாஸ்கர ரவி வர்மனின் காலகட்டம் கி.பி. 962இலிருந்து கி.பி. 1019வரை. இவருடைய ஆட்சியில் சேர நாடு, குடமலை நாடு, வேணாடு, கொங்கு நாடு ஆகிய பகுதிகளை உள்ளடக்கியது. அதவாது இன்றைய கேரளத்தின் கோழிக்கோட்டிலிருந்து திருவனந்தபுரம் வரை உள்ள பகுதி. மிக நீண்ட ஆட்சிக் காலம் உடைய சேர மன்னன் பாஸ்கர ரவி வர்மன். 58 ஆண்டுக் காலம் இவர் ஆட்சி புரிந்தார். இவர் காலத்தில்தான் யூதர்களுக்குச் சமூகத்தில் சிறப்புச் சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளன. இதற்கு ஆதரமாக இவர் யூதர்களுக்குத் தாமிரப் பட்டயம் (Jewish Copper Plate) அளித்துள்ளார் . இவருடைய ஆட்சிக் காலத்தில்தான் சேர நாட்டில் காந்தளூரில் போர்ப் பயிற்சிப் பள்ளி செயல்பட்டு வந்துள்ளது.

**போருக்கான பின்புலம்**

*முற்காலச் சோழர்கள் வீழ்ச்சிக்குப் பின் உறையூரில் சிற்றரசர்களாகக் குறுகியிருந்த சோழர்கள், விஜயாலய சோழன் காலத்தில் கி.மு. 9ஆம் நூற்றாண்டில்தான் எழுச்சி பெற்றனர். அவர், முத்தரையர்களை வீழ்த்தித் தஞ்சையைக் கைப்பற்றி, தஞ்சைச் சோழப் பேரரசைத் தோற்றுவித்தார். இதன் பிறகு பெரும் செல்வாக்குடன் வளர்ந்த சோழ சம்ராஜ்ஜியம் பராந்தகச் சோழன் காலத்தில், ராஷ்டிரகூடர்களுடன் நடந்த தக்கோலம் (அரக்கோணம்) போரில் வீழ்ச்சியைச் சந்திக்கத் தொடங்கியது.*

*இப்போரில் பராந்தகனின் மகன் ராஜாதித்தன் கொல்லப்பட்டார். பராந்தகனின் இறப்புக்குப் பின் அவருடைய இளைய மகன் கண்டராதித்தன் ஆட்சிப் பொறுப்புக்கு வந்தான். கண்டராதித்தன் காலத்தில் சோழப் பேரரசு மேலும் பலவீனமடைந்தது. சுந்தரசோழன் ஆட்சிக்காலத்தில்தான் சோழ நாடு மீண்டும் எழுச்சி பெறத் தொடங்கியது. அவர் ராஷ்டிரகூடர்களுடன் போரிட்டுத் தொண்டை மண்டலத்தை மீட்டார். ஆனால் அதற்கிடையில் இளவரசனாக முடிசூட்டப்பட்ட அவருடைய மகன் ஆதித்த கரிகாலன் மர்மான முறையில் கொலை செய்யப்பட்டார். சேர, பாண்டிய, ஈழ நாட்டுக் கூட்டணியும் காந்தளூர்ச் சாலையின் போர்ப் பயிற்சியும் இந்தக் கொலைக்கான பின்னணி எனச் சொல்லப்படுகிறது.*

**காந்தளூர்ச் சாலைப் போர்**

*தொண்டைநாடு, கொங்குநாடு, பாண்டியநாடு ஆகிய பகுதிகளைக் கைப்பற்றிய ஒரு வலுவான அரசாக மாறியிருந்த சோழப் பேரரசுக்கு பெரும் அச்சுறுத்தலாக இருந்தது சேர நாட்டில் இயங்கிவந்த காந்தளூர்ச் சாலையாகும். நுட்பமான போர்த் தந்திரங்கள், தற்காப்புக் கலைகள், தாக்கும் நுட்பம் ஆகியவை அங்குப் பயிற்றுவிக்கப்பட்டு வந்துள்ளது.*

*அந்தக் காலகட்டத்தில் இது போன்ற போர்ப் பயிற்சிக் கூடங்கள் அண்டை நாடுகள் எங்கும் செயல்படவில்லை. தன் அண்டை நாட்டில் ஒரு போர்ப் பயிற்சிக் கூடம் செயல்படுவது சோழ நாட்டின் பாதுகப்புக்கு உகந்ததல்ல என்று கருதியதால் ராஜராஜன் இப்போரை மேற்கொண்டார் எனவும் சொல்லப்படுகிறது. ஆனால் தன் சகோதரனான ஆதித்த கரிகாலனின் கொலையில் பின்னணியில் இருந்து செயல்பட்டது காந்தளூர்ச் சாலையில் பயிற்சிபெற்ற வீரர்கள்தான் என்பதால் அதற்குப் பழிவாங்கும் நடவடிக்கையாகவே இந்தப் போர் மேற்கொள்ளப்பட்டதாகவும் ஒரு கூற்று உண்டு.*

***ராஜராஜ சோழன் தன் குருவுடன்***



*http://tamil.thehindu.com/multimedia/dynamic/01783/history__1__1783409g.jpg*

*முதலில் ராஜராஜன் சேர நாட்டிற்குத் தன் தூதுவரை அனுப்பிப் பேச்சு வார்த்தை நடத்த முயன்றான். ஆனால் அவ்வாறு அனுப்பிவைக்கப்பட்ட சோழ நாட்டுத் தூதுவரைச் சேர மன்னன் முதலாம் பாஸ்கர*

ரவி வர்மா சிறைபிடித்தார். இதுதான் ராஜராஜன் உடனடியான படையெடுப்புக்கான காரணமாகச் சொல்லப்படுகிறது.

ராஜராஜனுக்கும் பாஸ்கரவர்மனுக்கும் இடையிலான இப்போர் கடற்போராக இருந்தததது எனவும் சொல்லப்படுகிறது. திருவனந்தபுரம் கடற்கரைக்கு அருகில் நடந்த இப்போரில் ராஜராஜன் சேரர்களின் கப்பல்களை வீழ்த்தி வெற்றியடைந்தார்.

'காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளிய கோவி இராஜராஜ கேசரி' என்ற கல்வெட்டு ஆதாரத்தின்படி கலம் அறுத்து என்பது கப்பல்களை வீழ்த்தி என அறிந்துகொள்ளலாம். இப்போரில் ராஜராஜன் மாபெரும் வெற்றி பெற்றான். காந்தளூர்ச் சாலை சோழர்களின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது.

சர்ச்சைகளும் விவாதங்களும் காந்தளூர் சாலைப் போர் குறித்தான விவாதங்கள் இன்றுவரை நடந்துகொண்டுதான் இருக்கிறது. காந்தளூர்ச் சாலை என்பது ஒரு கடற்கரை நகரம் என்றும் இப்போர் கப்பற்படைகளுக்கு இடையில் நடந்ததெனவும் சொல்லப்படுகிறது. ராஜராஜன் கல்வெட்டுகளில் சொல்லப்பட்டுள்ள சொற்களின்படி, ('காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி') கலம் என்றால் கப்பல் எனப் பொருள் கொண்டு சில ஆய்வாளர்கள் இது போன்ற ஒரு முடிவுக்கு வருகிறார்கள். இது பெரும்பாலான ஆய்வாளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை காந்தளூர்ச் சாலை என்பது பிராமணர்களுக்குச் சோறிடும் ஒரு கூடம் என்றார். அங்குச் சோறு அடுவதை சேர மன்னன் நிறுத்திவிட்டான். சோழ மன்னன் ராஜராஜன் அதில் தலையிட்டுக் காந்தளூர்ச் சோற்றுச் சாலையில் உணவு வழங்க வேண்டியதை முறைப்படுத்தினர் என்னும் புதிய கருத்தை வெளியிட்டார். ஆனால் இக்கருத்து ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

செங்கம் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட 'நடுகல்'லில் 'சாலைய் மறுத்து அங்குள்ள மலைஆளர் தலை அறுத்து' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மூலம் காந்தளூர்ச் சாலைப் போரில் தன்னை எதிர்த்த மலையாளர்களின் தலையை அறுத்தான் எனபதை அறிய முடிகிறது.
ஆதித்த கரிகாலன் கொல்லப்பட்டதற்கான பழிவாங்கலே காந்தளூர்ச் சாலைப் போர் என நடன. காசிநாதன் தன் ஆய்வுக் கட்டுரையில் குறிப்பிடுகிறார். ஆனால் அதற்கான ஆதாரம் எதுவும் மேற்கொள் காட்டப்படவில்லை.

ஆதாரங்கள் : 1.இராஜராஜ சோழனின் காந்தளூர்ச் சாலைப் போர் – சி. இளங்கோ, அலை

---

நன்றி: தி இந்து நாளிதழ்
ராஜராஜ சோழனின் முதல் போர் - திஇந்து
http://tamil.thehindu.com/society/lifestyle/article5762389.ece

---

# அலெக்சாந்தரும் சமண முனிவர்களும்

**-செல்வன்**

---

*இந்தியா மேல் படையெடுத்து வந்த அலெக்சாந்தர் தட்சசீல நகரத்தை பிடித்தான். அந்த நகரில் ஜைன சன்னியாசிகளுடன் அவனுக்கு ஏற்பட்ட தொடர்பை பழங்கால கிரேக்க வரலாற்று ஆசிரியர் ப்ளூடார்க் உள்ளீட பலரும் விவரிக்கிறார்கள்.*

*தட்சசீல நகரில் நிர்வாண ஜைன சாமியார்கள் இருப்பதாக கேள்விப்பட்டதும் அலெக்சாந்தருக்கு வியப்பு தாங்கவில்லை. அவர்கள் தட்சசீல மக்களை அலெக்சாந்தருக்கு எதிராக தூண்டிவிடுவதாக புகார் வந்தது. சரி என சொல்லி அவர்களை பிடித்துவர அலெக்சாந்தர் படைகளை அனுப்பினான். பத்து நிர்வாண சாமியார்களை பிடித்துவரவும் அவர்களை பார்க்க ஒட்டுமொத்த கிரேக்க படையே கூடிவிட்டது.*


Detail of a miniature of Alexander encountering a naked and houseless tribe (the gymnosophists)

*"நீங்கள் எல்லாம் யார்?" என அலெக்சாந்தர் கேட்க*

*"நீ யார்?" என அவர்கள் தலைவரான தண்டமிஸ் (கிரேக்க ஒலிபெயர்ப்பு) திருப்பி கேட்கிறார்*

*"நான் அலெக்சாந்தர். கடவுளின் மகன்" (கிரேக்க கடவுள் ஜீயஸின் மகன் அலெக்சாந்தர் என்பது அன்றைய நம்பிக்கை)*

*"நானும் தான் கடவுளின் மகன்.."*

*இந்த பதிலால வியப்படைந்த அலெக்சாந்தர் "உங்கள் துடுக்குதனத்துக்கு எல்லாருக்கும் மரணதண்டனை விதிக்கிறேன். ஆனால் நீங்கள் ஞானிகள் என எல்லாரும் சொல்லுகிறார்கள். அதனால் உங்களை சில கடினமான கேள்விகளை கேட்பேன். யார் தவறான விடையை முதல் முதலாக சொல்கிறார்களோ அவர்களை முதலில் கொல்வேன். அடுத்து மற்றவரை கொல்வேன். இதுக்கு தண்டமிஸ் தான் நீதிபதி. அவர் தான் யாருடைய பதில் மோசம் என சரியாக சொல்லவேண்டும்" என்கிறான்*

*சரி என்றதும் முதல் கேள்வியை கேட்கிறான்*

*"எண்ணிக்கையில் அதிகமானவர்கள் யார்? உயிருடன் இருப்பவர்களா? இறந்தவர்களா?"*

*"உயிருடன் இருப்பவர்கள் தான். இறந்தவர்கள் யாருமே இப்போது இல்லையே?"*

*"பெரும் உயிரினங்களை உற்பத்தி செய்வது எது? கடலா, பூமியா?"*

*"பூமிதான். கடலே பூமியில் தானே இருக்கிறது?"*

*"இருப்பதிலேயே அதிக தந்திரமான மிருகம் எது?"*

*"இன்னும் மனிதனால் கண்டுபிடிக்க முடியாத மிருகம் தான்.."*

*"நீங்கல்லாம் எதுக்கு தட்சசீல மக்களை எனக்கு எதிராக தூண்டினீர்கள்?"*

*"அவர்கள் தைரியமாக வாழவேண்டும், அல்லது தைரியமாக சாகவேண்டும் என்பதால்.."*

*"எது முந்தி வந்தது, இரவா, தினமா?"*

*"தினம் தான்..ஒரு தினம் முந்தி.."*

*"மிகவும் விரும்புதலுக்குரிய மனிதன் யார்?"*

*"அதிக பலமிருந்தும், பிறர் அவனைகண்டு அஞாமல் இருக்கும் தன்மை உள்ள மனிதனே அனைவராலும் விரும்பபடகூடியவன்..."*

*"மனிதன் என்ன செய்து கடவுளாக முடியும்?"*

*"மனிதனால் செய்ய முடியாத ஏதோ ஒரு விஷயத்தை செய்வதன் மூலம்.."*

*"ஒரு மனிதன் எத்தனை நாள் வாழவேண்டும்?"*

*"வாழ்வதை விட சாவதே மேல் என நினைக்கும் காலம் வரை..."*

*"வாழ்வு, சாவு? இரண்டில் எது வலுவானது?"*

*"வாழ்வு..ஏனெனில் அது பல நோய்களையும்,. பிரச்சனைகளையும் தாங்குகிறது..சாவால் அது முடிவதில்லை"*

*இப்படி அனைத்து கேள்விகளுக்கும் அனாசயமான பதில் வரவும் அசந்த அலெக்சாந்தர் "இதில் மோசமான பதிலை சொன்னது யார்?" என கடைசிகேள்வியை தண்டமிசை நோக்கி கேட்கிறான்*

*"முதல் பதில் தான் இருப்பதுலேயே மோசமானது....அதன்பின் 2,3,4.." என வரிசையாக எல்லா பதிலும் மோசம்" என்கிறார் தண்டமிஸ்*

*"இப்படி ஒரு தப்பான தீர்ப்பை கொடுத்ததுக்கு உன்னை முதலில் கொல்லுவேன்" என்கிறான் அலெக்சாந்தர்*

*"என்னை முதலில் கொல்ல முடியாது. ஏன் என்றால் முதல் முதலாக மோசமான பதிலை சொன்னவரை முதலில் கொல்வதாக தான் சொன்னீர்கள். என்னை நீதிபதியாகவும் நியமித்தீர்கள். என் தீர்ப்பு முதல் சன்னியாசியின் விடைதான் முதல் தவறான விடை" என்றதும் மகிழ்ச்சியடைந்த அலெக்சாந்தர் அனைவருக்கும் பரிசுகளை கொடுத்து விடுதலை செய்து அனுப்பினான்*

*இப்படி அன்றைய கிரேக்க தத்துவஞானிகளால் விடைகாண முடியாத கேள்விகளுக்கு அனாசயமாக பதில்கூறி படையெடுப்பில் யாராலும் வெற்றிகொள்ளமுடியாத மகா அலெக்சாந்தருக்கு ஆன்மிகரீதியான தோல்வியை பரிசளித்தார்கள் நம் சமண முனிவர்கள்.இவர்களை குறிக்க ஜிம்னோசொபிஸ்ட் (நிர்வாண ஞானிகள்) எனும் வார்த்தை அன்றுமுதல் கிரேக்க மொழியில் ஏற்பட்டது.*

---



செல்வன்
holyape@gmail.com

---

# தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகள்

***மின்னூல்கள் வெளியீடு:***

1. ***மலையாள அனுபோக மாந்திரீக ஆசிரியன்*** *- 26/04/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/04/thf-announcement-e-books-update-26042015.html*

2. ***ராஜதந்திர யுத்தகளப்பிரசங்கங்கள்*** *- THF Announcement: E-books update: 3/05/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/thf-announcement-e-books-update-3052015.html*

3. ***மகனே உனக்கு*** *- THF Announcement: E-books update: 17/05/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/thf-announcement-e-books-update-17052015.html*

4. ***செண்டலங்காரன் - விறலி விடு தூது*** *- 24/05/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/thf-announcement-e-books-update-24052015.html*

5. ***ஸ்ரீ தில்லையம்மன் வரலாறு*** *- 31/05/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/thf-announcement-e-books-update-31052015.html*

6. ***வேளாளர் சரித்திரம்*** *- 7/06/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-7062015.html*

7. ***திருமயிலைத் தலபுராணம்*** *- 13/06/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-13062015.html*

8. ***திருஇரும்பைமாகாளத் திருப்பதிகம்*** *- 12/06/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-12062015.html*

9. ***பண்டிதரின் கொடை*** *- 14/06/2015*
   *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-14062015.html*

10. ***வேதாரணிய தலப்புராண வசனம்*** *- 20/06/2015*
    *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-20062015.html*

11. ***தண்டலையார் சதகம்*** *- 21/06/2015*
    *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-21062015.html*

12. ***சிதம்பர மஹாத்மியம்*** *- 22/06/2015*
    *http://tamilheritagefoundation.blogspot.com/2015/06/thf-announcement-e-books-update-22062015.html*

13. ***பழநித்தல வரலாறு*** *- 27/06/2015*
    *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-27062015.html*

14. ***ஸ்ரீ கோதண்டராமஸ்வாமி ஸ்தலவரலாறு*** *- 28/06/2015*
    *http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/thf-announcement-e-books-update-28062015.html*

15. ***திருப்புன்னைநல்லூர் ஸ்ரீ மாரியம்மன்** - 4/07/2015*
    *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/blog-post.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/blog-post.html)*

16. ***திருவெண்காட்டுத் தலவரலாறு** - 11/07/2015*
    *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/thf-announcement-e-books-update11072015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/thf-announcement-e-books-update11072015.html)*

17. ***சுந்தர மூர்த்தி சுவாமிகள் வரலாறு** - 20/07/2015*
    *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/thf-announcement-e-books-update20072015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/thf-announcement-e-books-update20072015.html)*

***நாடார்குல மித்திரன்:***

1. *நாடார்குல மித்திரன் - 1923 - ஜனவரி மாதத்தின் 2 வது இதழ் (5/27/15)*
   *[http://thfreferencelibrary.blogspot.com/2015/05/1923-2.html](http://thfreferencelibrary.blogspot.com/2015/05/1923-2.html)*

2. *நாடார்குல மித்திரன் - 1923 - ஜனவரி மாதத்தின் 3 வது இதழ் (6/5/15)*
   *[http://thfreferencelibrary.blogspot.com/2015/06/1923-3.html](http://thfreferencelibrary.blogspot.com/2015/06/1923-3.html)*

3. *நாடார்குல மித்திரன் - 1923 - பிப்ரவரி மாதத்தின் 1 வது இதழ் (6/17/15)*
   *[http://thfreferencelibrary.blogspot.com/2015/06/1923-1.html](http://thfreferencelibrary.blogspot.com/2015/06/1923-1.html)*

***காணொளிகள் வெளியீடு:***

1. *ஏப்ரல் 2015: தென்னாப்பிரிக்காவில் தமிழ்க்கல்வி -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/04/2015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/04/2015.html)*

2. *மே 2015: இலங்கை போருக்குப் பின் தமிழர் மீள்குடியேற்றம் -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015.html)*

3. *மே 2015: லாடன் கோயில் குடைவரைக்கோயில் -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015_23.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015_23.html)*

4. *மே 2015: வளத்தி ஆதிநாதர் ஜினாலயம் -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015_29.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/05/2015_29.html)*

5. *ஜூன் 2015: திருமலை ஸ்ரீகேந்திர அரிஹந்தகிரி ஜைனமட மடாதிபதி ஸ்வஸ்தி ஸ்ரீதவளகீர்த்தி பட்டாரக சுவாமிகள் - [http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/2015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/2015.html)*

6. *ஜூன் 2015: திருமலை பஞ்சகுல தேவதைகள் ஜினாலயம் -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/2015_20.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/06/2015_20.html)*

7. *ஜூலை 2015: திருமலை ஸ்ரீசிகாமணிநாதர் -*
   *[http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/2015.html](http://tamilheritagefoundation.blogspot.de/2015/07/2015.html)*



Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை



“தமிழர்களின் விளையாட்டு”

தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)

வெளியிடும் காலாண்டு மின்னிதழ்

மின்தமிழ்மேடை - காட்சி: 2

ஜூலை - 2015

